5th November 1958]

(iv) number of cases ending in compromise;

(v) number of cases ending in conviction;

(vi) number of cases ending in acquittal; and

(vii) number of cases pending disposal; and

(*b*) the number of cases registered against—

(i) the tea-shop keepers;

(ii) barbers;

(iii) hotel keepers; and

(iv) dhobies?

*A*.—

(*a*) (i) 161.

(ii) 147.

(iii) 6.

(iv) 5.

(v) 100.

(vi) 32.

(vii) 4.

(*b*) (i) 65.

(ii) 3.

(iii) 33.

(iv) 1.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—ANNOUNCEMENT *RE* BILLS PASSED BY THE COUNCIL

Mr. SPEAKER : I have to announce to the House that the Madras Panchayats Bill, 1958 (L.A. Bill No. 33 of 1958) has been passed by the Legislative Council on the 4th November 1958 with amendments. I hope these amendments have already been circulated to the hon. Members.

## III.—CALLING ATTENTION TO THE FAILURE TO REGULATE THE SUPPLY OF WATER TO TAIL-END PORTIONS OF LOWER BHAVANI PROJECT AREA.

Mr. SPEAKER : I have received notice under rule 40 from hon. Members Sri V. S. Manickasundaram and Sri G. G. Gurumurthy. Sri Gurumurthy may now speak.

Sri G. G. GURUMURTHI : கனம் சபாநாயகர் அவர்களே, கீழ் பவானி ஆயக்கட்டு பிரதேசத்தில் இருக்கக்கூடிய கடைகோடி நிலத்து விவசாயிகளுக்கு தண்ணீர் சரியாக விநியோகிக்கப்படுவது இல்லை.

Sri M. KALYANASUNDARAM : Sir, on a point of order. I think Sri V. S. Manickasundaram has given notice under rule 40. He is not here now. That being the case, is it permissible under the rules for another Member to raise the matter on his behalf?

MR. SPEAKER: Both Sri V. S. Manickasundaram and Sri G. G. Gurumurthy have signed the notice under rule 40. Since Sri Manickasundaram is not present here, I have allowed Sri Gurumurthy to speak.

SRI G. G. GURUMURTHI: கனம் சபாநாயகர் அவர்களே கீழ் பவானி ஆயக்கட்டுப் பிரதேசத்தில் இருக்கக்கூடிய கடைகோடி நிலத்திலுள்ள விவசாயிகளுக்கு தண்ணீர் சரிவர விநியோகிக்கப்படுவது இல்லை. ஆனாலும் அவ அவர்களாக கட்டவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. "Tail end" என்று சொல்லக்கூடிய பிரதேசங்களில் சுமார் 240, 400 எக்கர் வரையிலும் அரசாங்கம் எந்த விதமான பொறுப்பும் எடுத்துக் கொள்ளவில்லை. "Tail endல்" "Dam"-லிருந்து தண்ணீர் விட்டு விட்டால், கீழே இருக்கக்கூடிய 200, 400 எக்கர் வரையிலும் விவசாயிகள் தண்ணீர் எடுத்து பாகுபாடு செய்துகொள்ளுவதிலே கஷ்டங்களும், தகராறுகளும் ஏற்படுகின்றன. இதுபற்றி ரெவின்யூ அதிகாரிகளிடம் சொன்னால், "எங்களுக்குத் தெரியாது, வரி வசூல் செய்வதோடு எங்களுடைய கடமை தீர்ந்துபோய்விடுகிறது" என்று சொல்லுகிறார்கள். அதே சமயத்தில் பி.டபிள்யூ.டி. இலாகாவில் சொன்னால் "நாங்கள் எந்த அளவு தண்ணீர் விட வேண்டுமோ, அந்த அளவு தண்ணீர் விட்டு விட்டோம், உங்களுக்குள்ளாக பாகுபாடு செய்துகொள்ள வேண்டும்" என்று சொல்லிவிடுகிறார்கள். இதனால் 200, 400 எக்கரா பிரதேசத்தில் தண்ணீர் பாகுபாடு பற்றி பல கஷ்டங்கள், சச்சரவுகள் ஏற்படுகின்றன. கடை வாய்க்கால்களில் "பீல்டு போதீஸ்" கொப்புகள், மதகுகள் 150, 200 எக்கருக்கு மேலே தண்ணீர் பிரிவினை செய்யப்படுகிறது. மற்ற ஆயக்கட்டுப் பிரதேசங்களிலும் இப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பிரதேச விஸ்தீரணம் பூராவும் தண்ணீர் சரியாகப் பாயவில்லை. அதைச் சேர்ந்த பீல்ட் போதிஸ்களில் இருக்கக்கூடியவர்களுக்கு தண்ணீர் சரிவர பாயவில்லை. அதனால் அந்த பிரதேசங்களை
10-10 a.m. அபிவிருத்தி அடையச் செய்ய முடியவில்லை. அதனால் அந்தப் பிரதேசத்தை அக்விசிஷன் செய்து கொள்வதற்கு பணத்தைக் கட்டினாலும் அதைச் செய்வதற்கு நீண்ட கால தாமதம் ஏற்படுகிறது. அதனாலும் அங்கு அபிவிருத்தி செய்ய முடியவில்லை. டிஸ்ட்ரிபூட்டரிகளில் தண்ணீர் விட்டால் அது கடைசி வரையில் போய்ச் சேருவதாக இல்லை. கடைசி வரையில் விநியோகம் செய்யப்படவில்லை. அபிவிருத்தி அடையாவிட்டாலும் அவர்கள் வரியைக் கட்ட வேண்டியதாக இருக்கிறது. அதனால் அவர்களுக்கு தண்ணீர் விட வேண்டியது அவசியமாக இருக்கிறது. சரியான கணக்கும் எடுத்துக்கொள்வது இல்லை. அதனால் ஒவ்வொரு விவசாயியும் பாதிக்கப்படுகிறார்கள். அவர்கள் அதனால் அபிவிருத்தி அடைவதற்கு இடம் இல்லாவிட்டாலும் வரியும் கட்ட வேண்டியதாக இருக்கிறது. அதைப் பார்த்து அவர்களுக்கு ஏதாவது நன்மை செய்ய வேண்டும் என்று கனம் மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

*THE HON. SRI P. KAKKAN: கனம் சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரேரணையானது (1) கீழ் பவானித் திட்டப்பகுதியில் கால்வாய் நுனிப் பகுதிகளுக்குத் தண்ணீர் சப்ளை செய்யத் தவறியது பற்றியும், (2) வயல் மூலமாக கிளைக் கால்வாய்கள் தோண்டி ஒவ்வொரு பட்டாதாருக்கும் தண்ணீர் கிடைக்கச் செய்யத் தவறியது பற்றியும், (3) ஆயக்கட்டுதார்களுக்கு நியாயமான முறையில் தண்ணீர் விடத் தவறியது பற்றியும் குறிப்பிடுகிறது.

(1) கீழ் பவானித் திட்டம் பகுதியில் கால்வாய் நுனியிலுள்ள பாசனப் பகுதிகளுக்குத் தண்ணீர் சப்ளை செய்யத் தவறியது. கீழ் பவானித் திட்டம் 207,000 எக்கருக்குப் பாசனமளிப்பதற்காக நிறுவப்பட்டது. அதில்

5th November 1958] [Sri P. Kakkan]

சுமார் 10,000 எக்கர் நெல் பயிரிடுவதற்கும், பாக்கி 1,97,000 எக்கர் புன்செய்ப் பயிர்களைப் பயிரிடுவதற்கும் ஆகும். கால்வாய் நுனியிலுள்ள இரு கிளைக் கால்வாய்களைத் தவிர மற்ற எல்லா கிளை கால்வாய்களிலும் தண்ணீர் விடும் அளவு திருப்திகரமாக இருக்கிறது. மொத்த ஆயக்கட்டுப்பரப்பில் சுமார் 5 சத விகிதத்தில் மட்டுமே நெல் பயிரிட உத்தேசிக்கப்பட்டிருந்தது. அதை மீறி ஆயக்கட்டுப் பரப்பில் சுமார் 25 சத விகிதம் வரை அனுமதியின்றி நெல் பயிர் செய்ததும், அதையொட்டி மேல் மட்டப்பகுதிகளில் மிகுதியான தண்ணீர் செலவுமே, கால்வாய் நுனிப்பகுதிகளுக்கு, சப்ளை குறையக் காரணம் எனக் கூறப்படுகிறது. இதுபற்றி அரசாங்கத்திற்கு முறையிடப்பட்டது. அதன் பேரில், கால்வாய் நுனிப்பகுதியில் போதிய தண்ணீர் சப்ளை இருக்கும்படி பார்த்துக்கொள்ளுமாறு, அப்பகுதி அதிகாரிகளுக்கு உத்தரவிடப்பட்டது. மேல் பகுதிகளில் அனுமதியின்றி நெல் பயிரிடுவதைத் தடுப்பதற்காக, கூடுமான எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்படுகின்றன. அனுமதியின்றி நெல் பயிரிடுபவர்களுக்கு அபராதமும் விதிக்கப்படுகிறது. குடியானவர்கள் சமூகத்தின் பால் தங்களுக்குள்ள கடமையை உணருவார்கள் என்றும், அனுமதியின்றி நெல் பயிரிடுவதைக் கைவிட்டு கால்வாய் நுனிப்பகுதிகளில் போதுமான நீர் கிடைக்கச் செய்வதில் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பார்கள் என்றும் நம்பப்படுகிறது.

(2) <u>வயல் வழியான கிளைக் கால்வாய்கள் வெட்டி ஒவ்வொரு பட்டாதாருக்கும் நீர் கிடைக்கச் செய்யத் தவறிய விஷயம்.</u>—வயல் வழி வாய்க்கால்கள் தோண்டுவதென்பது, சம்பந்தப்பட்ட குடியானவர்களைப்பொறுத்த விஷயம். வயல் வழி கால்வாய்கள் அனைத்தையும் அரசாங்கச் செலவில் தோண்டுவதென்பது இயலாத காரியம். அது நடைமுறையில் நடக்கக் கூடியதுமல்ல. செலவும் லட்சக்கணக்கில் ஆகும். ஆயினும் கீழ் பவானித் திட்டப் பகுதியில் ஆயக்கட்டை துரிதமாக அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பதற்காக 50 எக்கர் வட்டாரம் வரைக்குமான வயல் வழிக் கால்வாய்கள் தோண்டவும் அதற்கான நிலங்களைக் கைவசமாக்கவும் அத்துடன் 25 எக்கர் பகுதி அளவுக்கான வயல் வழி வாய்க்கால்கள் அமைப்பதற்கு வேண்டிய நில உரிமையை மேற்கொள்ளவும், திட்ட நிறைவேற்றத்தின் போது உத்தேசிக்கப்பட்டது. பின்னர், குடியானவர்கள் முறையீட்டிற்கு இணங்க மேலே கூறப்பட்ட அளவுக்கும் குறைந்த, வயல் வழிக்கால்வாய்களை தோண்டவும் அதற்கான நில உரிமையை மேற்கொள்ளும் பணியையும் அரசாங்கமே மேற்கொள்ளலாம் என்று உத்தரவிடப்பட்டது. ஆனால் நிலத்தை வசப்படுத்துவதற்கு வேண்டுமான தொகையையும் வயல் வழிக் கால்வாய்கள் தோண்டுவதற்கான தொகையையும் குடியானவர்கள், முன் கூட்டித்தந்தால் மட்டுமே இந்த வேலைகள் மேற்கொள்ளப்படும் என்ற நிபந்தனை விதிக்கப்பட்டது. குடியானவர்கள் தர வேண்டிய முன் பணத்தை வசூலிப்பதில் சுணக்கம் ஏற்படுவதாகவும் அதையொட்டி வயல் வழிக் கால்வாய்கள் தோண்டும் வேலையில் தாமதம் ஏற்பட்டதாகவும் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அத்தகைய தாமதங்களைத் தவிர்ப்பதற்காக, முதல் கட்டத்தில் குடியானவர்களுக்கு, வாய்க்கால்களை அரசாங்கச் செலவிலேயே வெட்டிக் கொடுக்கலாம் என்றும் பின்னர் அச்செலவுத் தொகையை சம்பந்தப்பட்ட குடியானவர்களிடமிருந்து வசூலித்துக்கொள்ள சட்டம் இயற்றலாம் என்றும் ஆலோசனை கூறப்பட்டது. இப்பிரச்னை அரசாங்கத்தின் தீவிர பரிசீலனையிலிருந்து வருகிறது.

வயல் வழி வாய்க்கால்களைத் தோண்டுவது முற்றிலும் குடியானவர்கள் சம்பந்தப்பட்ட விஷயம் என்றாலும், திட்டத்தின் ஆயக்கட்டுப் பிரதேசத்தில் எல்லா குடியானவர்களுக்கும் தண்ணீர் கிடைக்கச் செய்வதற்காக வயல் வழி கால்வாய்களைத் தோண்டும் வேலையை துரிதப்படுத்த அரசாங்கம் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்து வருகிறது என்பதை இதிலிருந்து அறியலாம்.

(3) தண்ணீரை ஆயக்கட்டுக்காரர்களிடையே நியாயமாகப் பகிர்ந்தளிக்கத் தவறியது.—தனிப்பட்டவர்களின வயல்களுக்கு வேண்டிய நீரை வழங்குவது ரெவினியூ இலாகாவின் பொறுப்பு. அனுமதியின்றி கால்வாய்களின் இடையே குறுக்குக் கரையமைத்தல், ஒழுங்கற்ற முறையில் நீரைத் திருப்பிக் கொள்ளுதல் முதலியன இருக்குமாளுல் அவைகளை நீக்கி சரியான முறையில் தண்ணீர் வழங்க அந்தத்துறை எல்லா நடவடிக்கைகளையும் எடுத்து வருகிறது. குடியானவர்களும் தங்களைப் பொறுத்தவரை "முறைக்கட்டு" ஏற்பாட்டை சரிவரப் பின்பற்றி ஒருவருக்கொருவர் ஒத்துழைக்க வேண்டும். அதன் மூலமாக எல்லாக் குடியானவர்களுக்கும் நியாமான முறையில் தண்ணீர் கிடைக்கும் வண்ணம் அரசாங்கத்திற்கு உதவ வேண்டும்.

இத்தகைய சூழ்நிலையில் பிரேரணையில் குறிப்பிடப்பட்ட தவறுகள் அரசாங்கத்தால் ஏற்பட்டவை அல்ல. தடையை மீறி அனுமதியின்றி குடியானவர்கள் நெல் பயிர் செய்ததும், புன்செய்ப் பயிர்களுக்கு வேண்டுமான அளவுக்கு மேல், தண்ணீர் பாய்ச்சிக் கொண்டதும், குறித்த காலத்தில் வயல் வழி வாய்க்கால்களைத் தோண்டிக் கொள்ளாது அவர்கள் தவறியதுமே பிரேரணையில் கூறப்பட்ட தவறுகளுக்குக் காரணம் என்பதை நன்கு அறியலாம்.

## IV.—CORRECTION TO AN ANSWER.

THE HON. SRI C. SUBRAMANIAM: While answering on 17th September 1958 the Legislative Assembly Question No. 151 relating to the number of candidates selected by the Madras Public Service Commission as Gramasevaks, Grade II, in 1957, I had stated in reply to a supplementary that candidates who apply for the posts of Gramasevaks, Grade II, should have passed the S.S.L.C. examination. But on verification I understand that the candidates who apply for the posts of Gramasevaks, Grade II, must have obtained a completed Secondary School-Leaving Certificate (i.e., must have appeared for the S.S.L.C. Public Examination in full), and should have secured not less than 40 per cent of marks in Tamil in the said examination.

## V.—PRESENTATION OF COMMITTEE REPORTS.

### (1) SECOND AND THIRD REPORTS OF THE COMMITTEE ON ESTIMATES.

SRI K. S. SUBRAMANIA GOUNDER: Sir, I, the Chairman of the Committee on Estimates having been authorised by the Committee to submit the Reports [a] on its behalf present:

(1) the Report of the Committee on Printing and Stationery; and (2) the Report of the Committee on the action taken (second Assembly) by the Government on the recommendation of the Committee in its report on the Sanitary Engineering Department.

### (2) THIRD REPORT OF THE COMMITTEE ON GOVERNMENT ASSURANCES.

SRI M. P. SUBRAMANIAM: உறுதி மொழிக் குழுவின் மூன்ருவது அறிக்கையை [a] நான் இங்கே சமர்ப்பிக்கிறேன்.

---

a Laid on the table of the House.